காத்தைப் - பேரன்பினானின் வெண்ணிறவிபூதியைப் பெட்புடன்பூசுவோர்கள், அருணிதியுமுயர்கதியு மாயுளும் பெருகுவா ரருள்பெறுவசந்தராயர் - அண்ணாவினிற்றுதி செ யுண்ணாமுலைக்குரிய வண்ணாமலைத்தேவனே ... (ருச)

(உருத்திராக்கந்தரிக்கும்விதிகூறியது.)

உச்சியிடையோர்மணி தலைமுத்தவிருகாதினு முயர்ந் தமாமணியாதிரண் - டுத்தமாங்கச்சிரத் தெண்ணைந்துநீள் கழுத் தமுமுப்பத்திரண்டாஞ், செச்சையணிமார்புநூற் றெட்டிருமுழங்கையிற் செப்புமிருபத்தாறதாஞ் - சேர்ந்தி ருமணிகைகட்டி லிருபத்திரண்டுமணி தேர்ந்துருத்ராக்கம ணியை, நிச்சயப்பயபத்தி நியமநெறியுள்ளன்பு நேயநி றையார்வமுடனே - நித்தலும்பூசைபுரி காலத்திலாயினு நீங்காதணிந்தபேர்கள், அச்சிவசொருபமவ ராமென்னு மாமறைக ளருள்பெறுவசந்தராயர் - அண்ணாவினிற்றுதி செ யுண்ணாமுலைக்குரிய வண்ணாமலைத்தேவனே...... (ருரு)

(செபமாலைக்குவிதியும்பலனுங்கூறியது)

செய்யவிருபத்தைந்து ருத்திரமணிக்கோவை சேர்த் துசெபமன்பொடுசெயிற் - செப்பரியமுத்திதரு மூவொ ன்பதக்கமணி செல்வமேன்மேலாயிடும், பையவெண்ணான் குமணி கல்விநலமுந்தரும் பதினைந்துமாபிசாரப் - பாலதா ம்பதின்மூன்று மேவுமுச்சாடன பலந்தருஞ் செபமாலி கை, கையிவிற்சிறுவிரலின் மேற்றள்ளன்ஞானமது காட் டும்பவித்திரவிரல் - கனகமுறுநடுவிரற் பகைதருந்தற்சனி சுடியநோய்விளிவுமுண்டாம், ஐயமிலையங்குட்ட மருளே தழைத்திடும் மருள்பெறுவசந்தராயர் - அண்ணாவினிற்று திசெ யுண்ணாமுலைக்குரிய வண்ணாமலைத்தேவனே...(ருசா)

(செபஞ்செய்யுந்திக்கின்பலன்கூறியது.)

நல்லகிழ்முகமா யிருந்துசெபமேசெய்யி னொடொரு ம்வசியமுண்டா - நாடுமக்கினிமூலை கோயிலைதென்றிசை யை நாடிச்செபம்புரியினே, வெல்லருந்திமைதரு நிருதிந ல்குரவே விளைந்திடுவருடதிசையதோ - வேண்டிமுன்றே டிய பொருட்செலவுவாயுதிசை விறமுச்சாடனமிகுஞ், சொல்லரும்வடக்குமுக மாய்ச்செபஞ்செய்திடிற் சொன் னமுங்கல்விநலமுந் - தோன்றுமீசானதிசை முத்திவீடா மென்று சொல்லுஞ்சிவாகமங்கள், அல்லலறவெத்திசையு மாகுமெதிகட்குநல் லருள்பெறுவசந்தராயர் - அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணாமுலைக்குரிய வண்ணாமலைத்தேவனே.

(பிரதோஷதரிசனவிதிகூறியது.)

நண்ணுதிரயோதசித் திதியதேபிரதோட நாளெ ன்றுபெயராகுமந் - நாளிலிருபத்தாறு நாழிகையதற்குமே லுமூனுநாழிகையுநில, வண்ணராத்திரியின்மூன் றனாநாழி கைத்தொகை வரைக்கும்பிரதோடகாலம் - மறவாமலேசி வா லயநந்தியிருகொம்பு மத்தியினினுட்டம்வைத்து, வெ ண்ணந்திகேசுரன் விஷணத்தைநிவிவான் மேவுழியினின் றிறைஞ்சி - விமலசிவலிங்கத்தை யரகரவெனச்சொல்லி விழியினுற்றெரிசிப்பவர், அன்னவருளாற்செல்வ மாயுளு ம்பெறுவர்நல் லருள்பெறுவசந்தராயர் - அண்ணாவினிற் றுதிசெ யுண்ணாமுலைக்குரிய வண்ணாமலைத்தேவனே. (௫அ)

(அனுசிதபதார்த்தங்களைக்கூறியது.)

பனையினதுவெல்லங் கிழங்குநுங்கொடுபனம் பழ மிவையருந்தலாகா - படர்தருசெடிப்பசலை செம்பசலைசி றுபசலை பரியகுண்டைச்சுரைக்காய், சினையுலவுமரவள்ளி யீருள்ளிவெள்ளுள்ளி செங்கீரைசெம்முருங்கை - தென்ன

வெல்லத்திரளொடு மிச்சவெல்லக்காச் சிரக்குபான்புள்ளிபு
ண்ணாக், கிலியதேன்கையாற் பிசைந்தயிரொட்டைநெய்
யெருமைசெம்மறியசப்பா - லின்றநாட்பந்திற் கறந்தபா
ல்ருதகத் தில்லிற்கறந்திட்டபால், அறுசிதமிராசார மு
டையோரருந்திடா ரருள்பெறுவசந்தராயர் - அண்ணாவி
விற்றுதிசெ யுண்ணாமுலைக்குரிய வண்ணாமலைத்தேவனே.()

{நாடொறுஞ்செய்கையால்வருமைவகைப்பாவமு
மதற்குநிவிர்த்தியுங்கூறியது.}

தினந்தொறும்பலபண்ட மம்மியிலரைப்பதாற் செ
றிவிறகடுப்பிலிட்டுச் - செந்தீயெரிப்பதாற் றண்ணீர்குடத்
திறுட் சேர்ந்திடமுகக்குமதனான், முனைந்தசோதினிகொடு
பெருக்கிநற்சாணிபட முறையாய்மெழுக்கிடுவதான் - மூரி
யரிவாண்மணையி லேகதிருத்தைப்பதான் மூனாலைம்பாவநீ
ங்க, விளைந்தமறையோதிட றருப்பணம்விடுத்திட னெரு
ப்பிவிடையோமஞ்செய - வியமமொடுபலியிடுத றன்பா
லுவந்துவரு மியதிபெறுமதிதியோர்கட், கனம்பகர்தலி
லைதினஞ் செய்மகமதென்பர்கா ணருள்பெறுவசந்தரா
யர் - அண்ணாவிவிற்றுதிசெ யுண்ணாமுலைக்குரிய வண்ணா
மலைத்தேவனே ........................................(௫௰)

(நாடொறுஞ்செயும் பஞ்சயாகங்கூறியது.)

பரிவொடுங்காலைக் கடன்கழித்தருமறை பகர்ந்திடு
தல்பிரமயாகம் - பலவமரர்ருடிபிதா ராதிகடருப்பணம்ப
ண்ணுமதபிதரியாகமாந், தெரிதரும்விதியினற் றீவளர்த்
தோமவினை செய்குவதுதேவயாகஞ் - செப்புஞ்சிவாகமப்
படியன்னபலியிடுத ரேர்ந்திடும்பூதயாகம், வருமரியவதி

தியர்க் குளமகிழ்ந்தன்னம் வழங்கன்மாவிடயாகநோய்-
மாற்றுமகலைமந்துங் தினஞ்செயிற்பாவமஃது வாராதெனத்
துணிந்தே, அரனருள்பெறுஞ்சைவ மறையவர்புரிந்திடு
வ தருள்பெறுவசந்தராயர் - அண்ணாவினிற்றுதிசெ யுண்
ணாமுலைக்குரிய வண்ணாமலைத்தேவனே ............... (௬௧)

(போஜனத்திற்குற்றங்கூறியது.)

பந்தியிடையோதன மிருப்புக்கரண்டியாற் பரிமா
றவுண்ணலாகாது - பாவையரிடுங்கறியை மீண்டுகொடுவா
வெனப் பன்னியிடவுண்ணலாகாது, சந்தியாகாலத்து மந்
தராத்திரியிலுந் தயிரடிசிலுண்ணலாகாது - சாலவயலாரு
ண்ட ஈற்கலந்தன்னிலே தானுண்ணலதிகதோடம், வெந்
தெடுத்திடுமட்க லத்திலுந்தகரத்து மிகவுடைந்திடுகலத்து-
மேவுமுள்ளங்கையிலு மிட்டுண்ணலின்றுண்ணன் மேலா
னதோடமாகும், அந்தமிகுபொன்வெள்ளி பாத்திரத்திலே
யுசித மருள்பெறுவசந்தராயர் - அண்ணாவினிற்றுதிசெ யு
ண்ணாமுலைக்குரிய வண்ணாமலைத்தேவனே........... (௬௨)

(போஜனகாலத்தன்னபலியிடும்விதிகூறியது.)

போஜனஞ்செயுமிடந் திருமெழுக்கிட்டுப் பொருந்
தியகிழக்குமுகமாய்ப் - பொற்பாயிருந்திட்ட வடிசின்மே
லுதகம் புரோட்சித்துடன்வலப்பால், வாசநறுநெய்யன்ன
லமர்துபிடிபலிவைத்து மந்திரநவின்றுநன்னீர் - வலமாக
வாபோசனங்கொண்டமிருதநீர் மருவுசிறுவிரலின்வழிவி
ட், டேசிலப்பலிகொடிக் கிட்டசவலைமங்கா லெழிற்பிரா
ணாகுதிபுரிந் - தின்னடிசிலுண்டுத்த ராபோசனங்கொண்
டெழிற்சேடநீர்ப்பெருவிரல், ஆசில்வழிவிட்டெழுத லா
சாரசைவநெறி யருள்பெறுவசந்தராயர் - அண்ணாவினிற்
றுதிசெ யுண்ணாமுலைக்குரிய வண்ணாமலைத்தேவனே. (௬௩)

(போசனஞ்செய்தபி னிருட்டானவிதிகூறியது.)

போசனஞ்செய்தபின் பாசமனமுஞ்செய்து பொ
ற்புடன்வடமிருக்கம் - பொருகாசனமேவி வில்வலன்வா
தாபி பொனறிடவிற்றையருமைத், தேசொடுஞ்சிரணஞ்
செய்தரும்பொதமக் கியமுனியையுள்ளியோர்ந்து - நில
மனவுந்திருந் தருந்திப்புனிந்தளந் தேர்ந்தங்கன்யாசமுட
னே, வாயுவெழும்பிரா ணயாமமாற்றினா மௌனமாய்
மூலேமுரு. மந்திரமகோரத்தை யுள்ளேசெபித்துமேன் ம
னிற்வொடுமிருப்பர்காளும், ஆசையுறுகிருக்த வாச்சிரம
நெறியென்ப ரருள்பெறவசந்தராயர் - அன்றுவிலிற்று
திசை யுன்றுமுலைக்குரிய வன்றுமலைத்தேவனே... (௬௪)

(தாம்பூலந்தரிக்கும்விதி கூறியது.)

மெல்லிலைக்காம்பும் பழுப்பொடுகாம்பதன் மேற்
றொரம்புங்கசங்கன் - மிகமுறுகலமுகவும் வதங்கலிவ்வெ
ட்டாரும் வெற்றிலைக்குற்றநீக்கி, நல்லபாக்கெச்சின்முக்
காலுமிழ்ந்தாராய்ந்த நறியவெள்ளிலைபிழிந்து - நன்றாக
ற்சுண்ணாம் பொம்பேலதக்கோல நன்மிளகுவான்மிளகு
நேர், சொல்லருஞ்சுக்குமனை மேவுசாதிக்காய் தொடர்ந்
திடுஞ்சாபத்திரி - சுகவாசபூரமிவை தாம்பூலசமிதமாய்த்
தயித்திடுவர்செல்வர்கண்டாய், அல்லியலர்வாவிகுழனிய
னுமலையனே யருள்பெறவசந்தராயர் - அன்றுவிலிற்று
திசை. யுன்றுமுலைக்குரிய வன்றுமலைத்தேவனே... (௬௫)

(தோடம்வரும்வகைகூறியது.)

. ஊணருந்தங்காலை பேசலகைசெய்தல்பிடி யுண்
டையாயுண்ணல்பிந்தல் - ஒருவிரலைநிக்கியுணன் மயிரொன்
புழுச்சிபுழு வுசெர்பட்டசோறுண்டிடல், காறுநசமயிரினைப்
பல்லாற்கடித்தலொரு காலினுற்காறேய்த்தனிர் - கழுவிடுத

னுங்கலத் தெச்சிலையுமிழ்ந்திடுதல் கையினனகமுரித்தற், பாணியாற்றலைசொறிதல் விரலினுற்றனைமிறல் பாழ்மனையி லேயுறங்கல் - பட்டகஞ்சாக்கட் குடித்தல்பெரியோரைப் பழித்தலித் திரையெழுப்பல், ஆணைதள்ளுதலிவை மகா தோடமென்பர்கா ணருள்பெறுவசந்தராயர் - அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணாமுலைக்குரிய வண்ணாமலைத்தேவனே. ()

(ஆசமனஞ்செய்யுங்காலங்கூறியது.)

வாசமலர்கொய்யினும் வீதியிடைபோய்வரினு மல சலம்விட்டுவரினும் - மாதரொடுசம்போக மேவிடினுநீசர் நிழன் மருவியுடன்மீறுபடினுந், தூசணையுடுக்கினும் பலகா ரமுண்ணினுஞ் சோறுண்ணினுநீருண்ணினுந் - தூயநற்கருமங் கடருமங்கள் புரியினுந் தொகுசிரார்த்தங்கள் செயினும், தேசுதருதானங்கள் செய்யினுங்கனிகாய்க டின்னினுந்தூயி லெழினும் - தீயகொலைசெய்குவோர் பாயுநிழலுறுமேயினுந் தீண்டொணாதவை தீண்டினும், ஆசமனமக்கணஞ் செய்யவ் விதியென்பர்கா ணருள்பெறுவசந்தராயர் - அண்ணாவினி ற்றுதிசெ யுண்ணாமுலைக்குரிய வண்ணாமலைத்தேவனே. ௬௭

(மூதேவிவாசமுந்தோடமுள்ளவையுங்கூறியது.)

நாட்டரசுநிழலும் விளாமரத்தடிநிழலு நன்மனையி னாக்குநிழலு - நடமாடுமனிதர்நிழ லிரவினுடன்மேற்படியி னலமிலாச்சேட்டைமருவும், பூட்டுநூன்மறையவர்க ணிழன்மிதித்திடற் புனிதமாயொருவனுண்ட - புனற்சேட மொருவனுண லாடைதோய்த்திட்டநீர் பொருந்தவுட்கொ ள்ளலாகா, வீட்டிடைபெருக்கிய விளக்கமாற்றுப்புழுதி மென்மயிருகுத்தபுழுதி - விறிடுங்கழுதைநாய்ப் புழுதிவெந் திடுசாம்பல் வேகாக்கரிப்புழுதியும், ஆட்டிடைப்புழுதிபட லாகாதமேலென்ப ரருள்பெறுவசந்தராயர் - அண்ணாவினி ற்றுதிசெ யுண்ணாமுலைக்குரிய வண்ணாமலைத்தேவனே. (௬௮)

(இவ்வகையமைமயிற்சிறப்பெனக்கூறியது.)

விளையுநன்னிலமுமாய்த் தண்ணீருமருகதாய் விளை யெலா மனையிடமுமாய்-வெள்ளிமலைபோலெருது கருமலை யெனக்கடாவிடுகோலுமாயேருமாய், களவிலாநெஞ்சுடை ய படியாளுமாயுழுங் காலத்திலேயுழவுமாய்க் - கனமான கேடையெருத் தலைமுயுமாய் நாற்றுவிளைகாலுமாய் மேனடையுமாய், வளமானபாடுமாய்க் களைபறிவுமாய்வேலி வளைவுமாய் நற்காவலாள்-வைப்புமாய்காடோறும் வந்துபார்க்குந்திறமுமா யிருந்தாற்பலிக்கும், அளையுறுங்கொழுமுளைச் செல்வமேசெல்வமா மருள்பெறுவசந்தராயர் - அன்னாவிவிற்றுதிசெ யுங்குமுலைக்குரிய வன்னமலைத்தேவனே.()

(இக்காலிக்கியிந்நாளிற்கூடிற்சுபுத்திரருண்டாமெனல்.)

இக்குளசரீரமுண் டாநின்றவயணமே காதசியிலங்குபர்வ-மியலமாவாசைமா தப்பிறப்பாகா திருக்குநாட் களிரிக்கியே, மங்கையர்கள்பூத்துநீ ராடியநினைந்தொட்டுவருமாதிரண்டுநாளில்-வாலாயமாய்க்கருக் குழிவாய்திறந்திடும் மணவாளனொடுகலந்தாற், பொங்குசுக்கிலமுஞ் சுரோணிதத்தொடுசேர்ந்து பூரிக்குமொண்சிப்பியிற்-பூத்தமுத்தைப்போலு மறுகுறவிமேற்பனிப் போலுந்திரண்டுருவமாம், அங்கமலசன்வந்தமைப்பனே யிவ்வுருவ மருள்பெறுவசந்தராயர்-அன்னாவிவிற்றுதிசெ யுன்னாமுலைக்குரிய வன்னமலைத்தேவனே..................................(எ௰)

(சரீரமுண்டாகுமுறைமைகூறியது.)

சுக்கிலஞ்சோணிதத் துட்சேர்ந்தசோணித சொருபமாய்த்தமர்வாசலைத்-தோன்றுதடைத்திடும் வாயுவேவேலிபோற் சூழ்ந்துகாக்குறும்விந்துவோ, டொக்கப்பிராணவாய் வோமியரமபானவாய் வொன்றியேவெள்யினிற்கு-

முட்பாய்ந்தவிந்துடன் பிராணவாயுவுகூடி யுள்ளேகலந்து நிற்கும், மிக்குதானன்கருவளர்க்கு மக்கருவுக்குண்மேவும் வியாதிமூன்றும் - விரவிக்கலக்குமைந் தாநாட்கருக்குமிழி மேனிபோலாய்வளருமே, அக்கமணிதார்க்கையுறை மிக்கப திவாசனே யருள்பெறுவசந்தராயர்-அண்ணாவினிற்றுதிசெயுண்ணுமுலைக்குரிய வண்ணாமலைந்தேவனே............(எக)

( சரீரம்வளரும்வகைகூறியது. )

கருத்தரித்திட்டபத் தாநாடிரண்டுருவு கண்டுமுளை போன்முளைத்துக்-கருதுபதினைந்தாந் தினத்திலேமுட்டை போற காணுமக்கருமிதந்தே, யுருத்தருமுதற்றிங்கள் கம்ப மாமிருமதியி லுற்றதலைமுதுகுமுகமா-மோதுமூன்முற்றிங்கள் செவ்வையும்பாதங்க ளுறுவிரல்களாயுமுண்டாந், திருந்துநாலாந்திங்கண் மூக்குமுகவுருவமாஞ் செய்யவைந் தாந்திங்களிற்-செவிநாவுகண்களாஞ் செப்புமாறுந்திங்கள் சேர்ந்திடுநகங்களுண்டா, மரத்தமாணிக்கம் பதித்தமுடிய ரசர்புக ழருள்பெறுவசந்தராயர்-அண்ணாவினிற்றுதிசெயுண்ணுமுலைக்குரிய வண்ணாமலைத்தேவனே...............(எ௨)

( இ-து. )

விஞ்சுமேழாந்திங்கண் மயிர்நரம்பென்பும் விளைந் திடுஞ்சடமோடுதான்-மேவிடுஞ்சலமலந் தங்குதாதுக்களு மிடைந்துமூச்சுண்டாகுமே, யெஞ்சிலெட்டாந்திங்க டா யுண்டசாரங்க ளியாவுமுனையானகதிர்போ - லேய்ந்தருவி பாய்ந்தே கபாலத்தின்வழியாக விழியவக்குழவிவளரும், கொஞ்சவுருவோவொன் பதாந்திக்களறிவுமேற் கொடுபிற ப்பித்தோன்றனைக் - குறித்திருகரங்கூப்பி யருடாவெனத்த வங் கொண்டேயிருந்துபுரியும், அஞ்சலப்பையொரீஇ வெம்பிறவிநோக்குமே யருள்பெறுவசந்தராயர்-அண்ணாவினிற்றுதிசெயுண்ணுமுலைக்குரிய வண்ணாமலைத்தேவனே.(எ௩)

(பிறவித்துன்பத்தியல்புகூறியது.)

கொடியபத்தாந்திங்கள் சற்குருப்பார்வையே கொண்டிடுங்குழவிசனனக்-கோதறுமபானவளி கீழ்நோக்குவிக்குமக் குழவியிருதன்பமுற்றுப், படியிற்பிறந்தபின் பகரரியமாயா படப்போர்வையான்மறைந்து-பண்டையிலிருந்தபேரறிவழிந்திருவினைப் பாசவலையிற்படிந்து,குடியனவுரோகமே காக்கவல்லநோயிலே தோயுமிந்தநோக்கிற்-சுவாக்கொடிபடர்ந்ததை நிகர்க்குமிச்சனனமாந் தோதகமொழிப்பரறிவோர், அடியவருணாமலையனே தொடியராசவனியனே யருள்பெறுவசந்தராயர்-அண்ணாவினிற்றுதிசெ யுண்ணாமுலைக்குரிய வண்ணாமலைத்தேவனே............(எச)

(அட்டலட்சுமிகள்பெயர்கூறியது.)

மட்டிலாச்செல்வங்கண் மருவுதனலட்சுமி வளர்ந்ததானியலட்சுமி-மணிமாடமனையாதி செந்நெல்வயரோட்டங்கள் வளமிகும்பூலட்சுமி, யிஷ்டபாக்கியகுணைச் சந்தானலட்சுமி யெழுந்தொடுநிறைந்தகேள்வி-யியல்பானபுத்திவளர் வித்தியாலட்சுமி யிசைந்தவீரியலட்சுமி, திட்டமாயெங்கணுஞ் சென்றபோதிலும்வெற்றி சேர்தரும்விசையலட்சுமி, நிமையந்தாறுஞ் சலங்காதிருக்கின்ற திரதைரியலட்சுமி, யட்டலட்சுமிவாசநேச துரைராசர்புகழருள்பெறுவசந்தராயர்-அண்ணாவினிற்றுதிசெ யுண்ணாமுலைக்குரிய வண்ணாமலைத்தேவனே.................................(எரு)

(ஆடியைந்தாந்தேதிவரும் வாரத்தின்பலன்கூறியது.)

ஆடிமாதம்பிறந் தைந்தாந்தினத்திலே யரியபுதவாரம்வந்தா-லவ்வருடமொருபோக நாடெலாமிகவிளையு மவனிமேலிட்டபயிர்கள், பாடுள்வியாழம்வரி லிருபோகமே விளைவு பாரெலாஞ்சுகிவனம்-பன்றுசுக்கிரனெனில் கதிர்

சாவிசவியனே பயிரொன்றும்விளையாதுகாண், நீடுஞாயி றுபயிர்கள் பாழ்த்திக்கவொருயோக நெல்விளையுமேசெல்வ மாம்-சேர்ந்தவங்காரகன் பலிச்சோளமேவிளையு நெறியீ தகுறியென்பர்காண், ஆடல்புரியண்ணலே மாடமாளிகை செல்வ மருள்பெறுவசந்தராயர்-அண்ணாவினிற்றுதிசெ யுண்ணாமுலைக்குரிய வண்ணாமலைத்தேவனே.............(எசு)

( பெண்களுக்குவரும் நக்ஷத்திரபலன்கூறியது. )

மன்னுமச்சுவினியிற் புட்பவதியாயிடின் மருமா னுக்கேதோடமாம் - வான்பரணிநாணல்ல மைந்தருண்டா ங்கனக மருவுகார்த்திகைமலடியா, முன்றுரோகணிதீர்க்க மங்கிலியமுடையளா மூலவுமான்றலைதலைவனுக் - குயர்சுக மளிப்படிரு வாதிரைவெறுப்புமன முடையளாம்புனர்பூச நாள், பொன்னெழில்சுகந்தரும் பூசஞ்சிறப்புடையள் பொலியுமாயிலியமைந்தர்-பூக்தொழியுமகமுரிய புருடன் மேலதிகாமி பூரமைந்தர்களானியாம், அன்னநடையார்நட ன சாலைவளர்சிங்கபுரி யருள்பெறுவசந்தராயர்- அண்ணா வினிற்றுதிசெ யுண்ணாமுலைக்குரிய வண்ணாமலைத்தேவனே.

( இ-ரு. )

உத்திரம்பதிவிரதை யத்தமென்மேற்செல்வ முண் டாயிடுஞ்சித்திரை - யோங்கியநலந்தரும் பாக்குறுசுவாதி சுக முற்றிடுந்தனிவிசாகம், மந்திமந்தலைவனுக் கல்லல்புன் னேய்கேட்டை மறுபுருடனிச்சைமூலம் - வாழ்வுபால்பா க்கியம் பூராடமடிமைகெடு மாமுத்திராடஞானப், பத்திபு றமோனநற் பொருளாமவிட்டம் பசும்பொனுள்சதையமி திபோம் - பகரும்புரட்டைமல டுத்திரட்டாதிமிடி படுமி ரேவதிநடலையாம், அத்தந்துகிர்ச்செறி மடந்தையர்கள்பூ த்தபல னருள்பெறுவசந்தராயர் - அண்ணாவினிற்றுதிசெ யுண்ணாமுலைக்குரிய வண்ணாமலைத்தேவனே...........(எஅ)

(அருசமுருதவிடங்களைக்கூறியது.)

தேவாலயங்களிற் சந்நிதானங்களிற் றிருவிழாவிற் சிறந்த - தேர்நடந்திடும்பொழுதி லருமறைபகர்ந்தவழி செய்யுந்தழற்சாலையிற், பாவாணர்கல்விப் ப்ரசங்கம்புராணம் படிக்கின்றவித்வசபையிற் - பார்வைக்கலங்கார சோபன முகூர்த்தங்கள் பண்ணும்விவாகசபையிற், கோவானசிங்காதனத்திருந்தரசுசெங் கோல்கொண்டராசர்சபையிற் - கூறுமிவ்விடமெலா மருசமிலையென்ற கூப்பிட்டுரைக்குமறைகள், ஆவாகனத்தனே மாவார்வனத்தனே யருள்பெறுவசந்தராயர் - அன்றுவினிற்றுதிசெ யுன்றுமலைக்குரிய வன்றுமலைத்தேவனே..............................(எக)

(அசுவவிலக்கணங்கூறியது.)

நீலமரகதமுத்து மாணிக்கமம்பொன் னிறைந்தவெண்பனிசந்திரன் - நெடியதாமரைமலர்க் காசைமலர்கருமுகி லெருப்புமணியலண்டுதிம்பாற், கோலமுறுகின்றசெம் பஞ்சுக்குழம்புகுயில் கூறுமீரொட்டுநிறமாங் - குதிரையுத்தமமிவையி லொருநிறமுடைத்தாய்க் குறித்தமுகமார்புச்சிவாற், காலல்வெட்டிடம் வெளுப்பாயிருக்கிலது கதியட்டமங்கலமதாய் - கவினுமுகநாற்பாத மைந்தும்வெளுப்புறிற் கனபஞ்சகல்யாணியாம், ஆலவாயிற்பரியி லக்கணமுரைத்தவா வருள்பெறுவசந்தராயர் - அன்றுவினிற்றுதிசெ யுன்றுமலைக்குரிய வன்றுமலைத்தேவனே..............(அ0)

(இ-து.)

கட்டுவாம்பரிநாபி தொட்டுமுன்புறமெலாங் கதிர்போற்சிவந்தமதிபோற் - கவினுறம்பின்முழுது நலமாவெளுத்திலக் கற்கிபகல்விஜயமென்பார், வட்டமதிபோலவே முற்புறம்வெளுப்பாய் வயங்கியேபிற்புறமெலாம் - வடிவு

செக்கதிபோற் சிவந்திடுங்கிள்ளையது மருவுகதிர்விஜயமெ
ன்பார், இட்டநூறங்குல முயர்ந்தபரியுத்தம மென்பதூ
நாலங்குல - மிவுளியதுமத்தியம தறுபத்தொரங்குலமி ய
ம்புமதமக்சோடையாம், அட்டமங்கலதுரக நித்தலுநடாத்
துதுரை யருள்பெறவசந்தராயர் - அண்ணாவினிற்றுதிசெ
யுண்ணாமுலைக்குரிய வண்ணாமலைத்தேவனே..........(௮௧)

( இ-ள். )

வாசியின்வயதுமுப் பத்திரண்டேவருட மருவிடும்
பத்தயத்தை - மாற்றிலொருமூன் றுவற் சரமுமிருமாதமு
மன்றுநாட்பன்னிரண்டாம், பேசுபரியெவ்வண்ண பேதக
மிருக்கினும் பெருவெள்ளைதான்கலந்தாற் - பெட்புமிகுமப்
புரவி தலைவன்றனக்குப் பெருஞ்செல்வமுங்கல்வியாம், தே
சுளகறுப்புப் பரிக்குவயிறேனுந் திகழ்ந்தநெடுமார்பமேனு
ஞ்-செஞ்சிவப்பேறினும் வெள்ளைநிறமேவினுஞ் செயவாரு
ணத்துரகமாம், ஆசுமதுரஞ்சித்ர வித்தாரகவிஞர்புக ழரு
ள்பெறவசந்தராயர் - அண்ணாவினிற்றுதிசெ யுண்ணாமுலை
க்குரிய வண்ணாமலைத்தேவனே......................(௮௨)

( இ-ள். )

ஏறுபரிமாக்கழுத் திடையிரட்டைச்சுழி யிருக்கின்
மிடியின்னலுண்டாம் - இருகாலிலேயிரட் டைச்சுழியிருக்-
கிலவ் விவுளியாணிகளபந்தம், கூறருங்கொடியவினை யாமி
றுதியுண்டாங் குதக்குமிருதடுதனினுங்- குலவுமுற்காலடியி
னுங்கபோலத்தினுங் கோதறுமுழந்தாளினும், வீறுசுழிதா
னொன்றின் மாவேறுதலைவனை வெவ்வினைமிகுத்தொறுக்கு-
மேவுமிவுளிப்பந்தி யூடுறப்பண்டய மெலிந்தநல்குரவெய்
திடும், ஆறலவுசெம்பவள வேணிமதிமுடியனே யருள்பெ
றுவசந்தராயர்-அண்ணாவினிற்றுதிசெ யுண்ணாமுலைக்குரிய
வண்ணாமலைத்தேவனே..............................(௮௩)

(இ-ள்.)

தெரிதருநாலுக்கினிடை யொருசுழியிருக்கிடிற் றெய்வமணியென்றுபெயராம்- திருமகள்விலாசமுண் டாமுக நடுவிலாயி னிசுருமார்பிலைவநாலிடம், மருவியவிரண்டுசுழி யுண்டாயின்வெற்றிசரு மாறிலாச்சரிமத்தகம் - மணியாயி ருக்கிலவ் வாசிமேலேறுவோர் வாழ்வுமேன்மேலெய்தவா ர், விரவுநெற்றியினடுவி லொருசுழியிருக்கினது வீறுயிதிம யுமுண்டாம் - மேலிவ்விடங்களிற் சுழியிலாவிவுளியின் மேலேறனன்றன்றுகாண், அரியயர்களவிடற் கரியபேரழ கனே யருள்பெறுவசந்தராயர்-அண்ணாவினிற்றுதிசெயுண் ணாமுலைக்குரிய வண்ணாமலைத்தேவனே.................(௮௪)

(இ-ள்.)

வேங்கைநரிசிங்கமுயன் மயின்மல்லரம்புமத வே ழங்குரங்குபோல -வேசமுளநடையதாய்ச் சங்குவெண் கவலின் விலாழிகால்வாய்நுரையுமாய்த், தாங்குவிற்றொ னிசங்கு மேகமத்தளமேறு தண்டிமைமடங்கவொலியாய் ச்-சாற்றுகுறமகள்போற் கவிழ்ந்தமுகமாகநாத் தழையுமா ந்தவிரினிறமாத், தேங்கமழ்மலர்ந்தகரு நெய்தல்போலுக் கிரஞ்சேர்ந்தவிழியாய்ப்பறகடாஞ்-செப்பமாயொப்பமா ய் வாயிலந்தசாணாய்ச் சிறக்குங்குளம்புயரமா, யாக்குதி லாலக்ஷண முரைத்தவிதியென்பர்கா ணருள்பெறுவசந்த ராயர்-அண்ணாவினிற்றுதிசெ யுண்ணாமுலைக்குரிய வண்ணா மலைத்தேவனே.........................................(௮௫)

(இ-ள்.)

பாயும்பெரும்பரி முகத்திடைவெளுத்திடிற் பாரா சனாச்செயிக்கும் - பணிபூண்கழுத்துவால் முதமிலைவெ ளுத்திடிற் பாக்கியமெலாங்கொயிக்கும், ஏயுமிருபிடர்வெ ளியா யாயிருந்தாற்புதல்வ ரின்பமேன்மேலுமுண்டா-மெ

மின்மார்பில்வெள்ளையுறில் கவலைநோயின்றியே யெப்போ
தமனமகிழ்தருந், தோயுமுகமிடதுபால் வெள்ளைநிறமேவி
டிற் றாயசந்தானமுண்டாந்- தோன்றியவலப்புறம் வெண்
ணிறஞ்செல்வமாந் தூய்முகம்பிற்பாற்சுகம், ஆயும்ப்ரபந்த
கவி நேயம்பொருந்துதனா யருள்பெறுவசந்தராயர்-அண்
ணாவினிற்றுதிசெ யுண்ணாமுலைக்குரிய வண்ணாமலைத்தே
வனே.................................................(அ௬)

( இ-கு. )

மார்புங்கழுத்தமர வப்படம்போலதாய் வாழைமட
லொத்தசெவியாய்-வதனமுக்கோணமாய் நாசலுயர்ந்தகல
மாய் வைக்குமடிபந்தொத்ததாய்,ஏர்புனையுநாலுகா லுங்க
டைந்தேயதையெடுத்தூநாட்டியதுபோலா-மிருதொடைதி
ரட்சியாய்ச்சுழல்கின்றபோது நீ யெழுகடைக்கோலென்ன
லாய், போர்புரிமுகத்திலே வெட்டிநூமெதிர்ப்பதாய்ப் புர
வியோன்மனமறிவதாய் - பொங்கசெழிகோட்டையுந் தங்
கியதருக்கமும் புலியெனப்பாய்கின்றதாய், ஆர்பரியிருக்கி
ன்ற தந்தமப்புரவிகா ணருள்பெறுவசந்தராயர் - அண்ணா
வினிற்றுதிசெயுண்ணாமுலைக்குரிய வண்ணாமலைத்தேவனே.

( இ-அ. )

கொய்யுளைப்புரவியது நிற்கின்மலையென்னவுங் கூ
த்திடமகளென்னவுங் - குலவிடும்வாசனையின் மான்மதம்
பாளிதங் குங்குமமகிற்கொப்பதாய், வெய்யகட்பொறிய
ரா வட்டநெடுவீதிநடைவிடுசுழற்பந்தென்னவும்-மேலேறு
சேவகன் காற்குள்ளடங்கியே வேகத்தில்வளியென்னவுஞ்,
செய்யுநற்சாரிகை பதினெட்டுமுள்ளதாய்த் திருத்தமிருநா
ன்குவயது - சென்றபரிமேலேறல் விதியென்றுமறையாஞ்
செழும்பரிமேலேறிவந்தெம், ஐயரீபாண்டியற் கறிவித்ததெ

ன்பர்காணருள்பெறுவசந்தராயர் - அன்னாவினிற்றதிசெயுன்னாமுலைக்குரிய வன்னாமலைத்தேவனே......... (அஅ)

( இவர்முன்னிலின் வருபெறவேண்டுமெனல். )

நாமமாயபிறவி சாராதமெய்ஞ்ஞானசாதனம்பெறவேண்டினோர்-சரியைகிரியாயோக மூன்றுங்கடந்தமெய்ச் சற்குருவையடையவேண்டும், நாமமார்தருசிவாலயலிங்கதரிசன நாடியருள்பெறவேண்டினோர்-நக்கன்வலக்கைதலைமேற்கொண்டவதிகார நந்தியைமுன்காணவேண்டும், பூமியாளரசரைக் கண்டுகாரியசெயம் பூர்த்தியாய்ப்பெறவேண்டினோர் - புரவலர்கருத்துக் கிசைந்தமந்திரிகள்பாற்போய்முன்புகாணவேண்டும், ஆமிகவளங்கள்சிவ் காபுரிவிளங்கவரு மருள்பெறுவசந்தராயர்-அன்னாவினிற்றதிசெயுன்னாமுலைக்குரிய வன்னாமலைத்தேவனே..........(அகூ)

( கலவியிற்கொக்கோகவகைகூறியது. )

நாடுமுடலின்மழையுமா லிக்கனமதோனைக்கு நன்றுமிகழ்தாபான-நல்லசுவைபத்தென்று மமிர்தநிலைபதினைந்து க்குநகக்குறிகளேழும், கூறுதந்தக்குறிக ளெட்டுமுயர்பறவைபோற் குரலோசையெட்டுமிருகைக்-குவிதாடனங்களிரு நான்குமுனைகரணங்கள் கூறுநாற்பத்தெட்டுமே.பூசெலவிப்போக மெய்ம்முயக்கொட்டு முறமுநூற்றிருபதுடனே-யோராருமொழிகின்ற கொக்கோகவிதமறிக் தூடலோடினிதாகவே, யாடவருமங்கையரு மநுபவித்திடலின்ப மருள்பெறுவசந்தராயர்-அன்னாவினிற்றதிசெ யுன்னாமுலைக்குரிய வன்னாமலைதேவனே....................(கய)

( பெரும்பாலுநோய்கள்வாராவகைகூறியது. )

எட்டுநாளைக்கிருமுழுக்காடுவோர் பட்சமிருகண்கலிக்கமிடுவோர்-எத்தாகமதிதொறும் பித்தநீரொல்லாமெடு

த்திடமருந்துகொள்வோர், திட்டமாயெண்ணான்கு நாளினு க்கொருகாற் றிருந்திழைபுணர்ச்சிசெய்வோர்-செப்புமொ ருமூன்று மாதத்திலகுாசியமத சிருடன்செய்துகொள் வோர்,வட்டமாமூவிரு மதிக்கொருவிரோசனம் வாங்காம லேவாங்குவோர் - வயிறுபசிகண்டுண்ணு வோர்களுக்கொ ருநோயும் வாராதுமிகுதியாக, அட்டமாசித்திமுன் னிட்ட மதரோசனே யருள்பெறுவசந்தராயர் - அண்ணுவினிற்று திசெ யுண்ணுமுலைக்குரிய வண்ணுமலைத்தேவனே.....(சுக)

( தீயோர்தேடுபொருள் போம்வழிகூறியது. )

வையகந்தன்னிலே தீயோர்களிட்டுபொருள் வம் பரு க்யாம்பிணிக்காம்-வாயோட்டமாகவே பேயோட்டுபூ சாவி மார்கடஞ்செலவிறுக்காங், கையகங்கொண்டகொ லை பாதகர்க்காம்படைக் கன்னமிடுகள்ளருக்காங்-கஞ்சாம யக்கபினி சாராயமாசுனங் கடியகட்குடியருக்காம், மெய் யகஞ்சிறிதிலாப் பொய்வழக்கதுபேசும் வீணருக்காந்தழற் காம்-வேசையர்க்காம்பூத மூசுமண்ணுக்காகும் வேந்தர்த ண்டத்திறுக்காம், அய்யனே துய்யனே செய்யவெழின்மெ ய்யனே யருள்பெறுவசந்தராயர் - அண்ணுவினிற்றுதிசெ யுண்ணுமுலைக்குரிய வண்ணுமலைத்தேவனே..........(சுஉ)

( நல்லோர்பொருட்பயன் படுமாறுகூறியது. )

சேற்கடற்றுரணியி னல்லோர்களிட்டுபொரு டே வாலயங்களுக்காந் தேவாபிடேகமா ராதனைக்காகமயர்தி கழ்சமாராதனைக்கா, நூற்கடற்கரைகண்ட புலவர்கட்கா மௌன நுவலுமெஞ்ஞானியர்க்காம் - நோற்குமாதவமு டைய பேர்க்காம்பசிக்கனலு கர்ச்சிக்குமுதவலாகும், நா ற்கிளரும்வேதநெறி வேள்விகட்காஞ்சுகுண நண்ணுதான ங்களுக்கா - நற்றொண்டர்பாகவதர் தங்களுக்காம்புரியு நா லெட்டறங்களுக்காம், ஆற்கணுல்வர்க்குமுன் னருள்பரஞ்

சோதியே யருள்பெறுவசந்தராயர்-அண்ணாவிலிற்றதிசெ யுண்ணாமுலைக்குரிய வண்ணாமலைதேவனே..............(௬௩)

(பிரயாணத்துக்குராசிபலன்கூறியது.)

மேடலக்கினமதனி லூர்ப்பயணமாகாது விரிடப கலமுள்ளதாம் - மிதுனத்தில்செலுங் காரியமெதுப்படு மென்கடகமராசர்சேவை, நாடருஞ்சிங்கத்தி லாதாயமாங் கன்னி னளிர்சான் காலுந்தலாம்-நற்பொருள்கிடைக்கும் விருச்சிகம்பிணிவிரு லவியுடனடுக்கமுண்டாங், கோடிறந் தனுசத் தருஜயம்மகரமது கொடியபயமாங்கும்பமோ- கொடியர்தண்டனையெய்து மீனமழையாற்பயங் கொண்ட யாத்திரைசெய்காலத், தாயிவேயுறதோளி பங்கவிஃதுண் மையா மருள்பெறுவசந்தராயர்- அண்ணாவிலிற்றதிசெ யுண்ணாமுலைக்குரிய வண்ணாமலைத்தேவனே..............(௬௪)

(முக்குணத்தியல்புகூறியது.)

ஞானமருடவமேன்மை வாய்மைபொறைமோன மொடு நவைசெயைம்பொறியடக்கல்- நற்கருமவியல்புநெறி சாந்தமுயர்கல்வியிவை நல்லசாத்விககுணமாம், ஈனமறுதானமன வூக்கந்தவந்தரும மெழில்கல்விகேள்விஞானம்-இசைவீரசௌரிய மலங்காரமிவையே யிராசதகுணத்தியல்பாங், தாறுமநெடுந்துயி லொழுக்கமுதனிலமுதாழ்வஞ்சமாதிகோபங் - தாவுகொலைபெருண்டி சோம்பு பொய்காமமிவை தாமதகுணத்தன்மையாம், ஆனமுதமைந்தாடு மந்நிவண்ணத்தனே யருள்பெறுவசந்தராயர்-அண்ணாவிலிற்றதிசெ யுண்ணாமுலைக்குரிய வண்ணாமலைத்தேவனே..................................................(௬௫)

(நவக்கிரகதானங்கூறியது.)

. பாலுவுக்கிந்திடுந் தானமதுகன்றின்ற பசுவாகுமதி தனக்குப் - ப்ளிறச்சங்குசெவ் வாய்க்குச்செவப்பெருது

பைம்புதற்குச்செம்பொனும், வானியல்வியாழந் தனக்கு வெண்பட்டாடை மாசுக்கிரற்குவெள்ளி-மருவியசனிக்குல லைவ கரியநிறமாயிலகு மயிடமாமேருமைக்கடா, தானிய லிராகுவுக் கச்சங்கறப்புடைத் தானவெள்ளாட்டுக்கடா - தக்கசெவ்கேதுவுக் கோதரியமதயானை சாற்றமறையோர்க்களித்தல், ஆனநவக்கிரக தானவிதியீதென்ப ரருள்பெறுவசந்தராயர்-அன்னூவினிற்றுதிசெ யுண்ணூமுலைக்குரிய வன்னூமலைத்தேவனே.................................(கசு)

(நவக்கிரகவுருவுந்திசையுங் கூறியது.)

நடுவட்டமாமிரவி யுருவிருக்கின்றநிலை நாடுமக்கினிமூலைதா - னற்சதிரமதியுருக் காற்றிசைத்திரிகோண நானிலமகன்வடிவமாம், வடிவிலீசன்றிசைப் பாணவடிவம்புதன் வடதிசைத்திர்க்கசதுரம்-மருவுபொன்கீழ்த்திசைப் பஞ்சகோணத்துரு வயங்குநீர்தருசுக்கிரன், மிடையுமேற்றிசைதனுப் போலுருச்சனிநிருதி மேவுசூர்ப்பாகாரமாய் - மேவுவனிராகுவட மேற்றிசைத்துவசமென வெங்கேதுதங்குமிடமாம், அடையுமொன்பதுகிரக வடிவமுந்திசையுமீதருள்பெறுவசந்தராயர்-அன்னூவினிற்றுதிசெ யுண்ணூமுலைக்குரிய வன்னூமலைத்தேவனே.........................(கஎ)

( நவதானியமுஞ்சமித்துங்கூறியது. )

சூரியன்கோதுமை செஞ்சாலிசோமனுந் துவரைசெவ்வாய்தனக்காஞ் - சொல்லரியபுந்திக்கு நற்பசும்பயறதாந்துய்வியாழந்தனக்கு,வேரியங்கடலையாம்.வெள்ளிக்குமொச்சையாம் மேவியசனிக்கெள்ளதாம் - வெற்றிகொளிராகுவுக் குளமாடங்கேது விலைகாணநவதானிய, நரிய

லெருக்குப் பலாசங்கருங்காலி நாயுருவியச்சுவத்தம் - நல்லத்தியன்னிகூர்ப் புல்லறுகுதர்ப்பையிவை நவசமித்தாகுமென்றே, யாரியமுணர்ந்தமே லவரிதவிதியென்ப ரருள்பெறுவசந்தராயர்-அன்றுவினிற்றுதிசெ யுண்ணாமுலைக்குரிய வண்ணாமலைத்தேவனே..............................(௯அ)

( மூவர்தேவாரத்தொகைகூறியது. )

பன்னருந்திருஞான சம்பந்தர்செந்தமிழ்ப் பதிகமீரொன்றுயிரம்- பண்பானசுந்தர ரிசைத்ததேவாரமுப் பஃதுமேலேழாயிரம், நன்றுதற்றிலகவதி யாரொடுந்தோன்றுதிரு நாவினுக்கரசர்சொன்ன-நற்றமிழ்ப்பதிகநாற் பத்தொன்பதாயிர நாடுமிம்மூவர்மொழியுட், பின்னரொண்ணூற்றுறு பத்துநாற்பதிசயிப் பேருலகுதனில்விளங்கும்-பேசுமிருநூற்றேழு பத்தைந்துசிவதலப் பெருமைசேர்பதிகமாகும், அன்னதிருமுறையோதி நின்னடிப்பூசைசெய் தருள்பெறுவசந்தராயர் - அன்றுவினிற்றுதிசெ யுண்ணாமுலைக்குரிய வண்ணாமலைத்தேவனே..............................(௯௯)

( சிற்றின்பப்பேரின்பவட்டாங்கயோகங்கூறியது. )

வனிதைபஞ்சணையாறு சுவைபோசனங்கந்த மருவுசித்திரவஸ்த்திரம் - மாமைமணியிழையணித் தயிலதாம்பூலமென் வகையதேசிற்றின்பமாம், தினமணிவிபூதிருத் ராக்கபஞ்சாக்கரந் தீர்த்தம்பிரசாதமாசான்-றெரிசனமிலிங்கசங் கமமெட்டுமென்பருட் டெளிதரும்பேரின்பமாம், தனியியமநியமமா தனபிராணுயாம தற்பிரத்தியாகாரமாம் - தாரணைதியானஞ்ச மாதியிவ்வெட்டுமே சாற்றுமட்டாங்கயோகம், அனவரதநடனமிடு வனருகபதத்தனே யருள்பெ

றுவசந்தராயர் - அண்ணாவினிற்றுதிசெ யுண்ணாமுலைக்குரிய வண்ணாமலைத்தேவனே..............................(ள)

( நாலுயுகத்திலும்பூசைசெய்தவர்களைக்கூறியது. )

திதிலாதுயர்கிரேதாயுகந்தன்னிலே செங்கனற்சோதிமலையாக்-திருமாலயன்முதல விமையோர்கண்மறையினாற் சிவதருமமேபுரிந்தார், நீதிமாமணிதிரேதாயுகத்தாகமநெறித்தபோதனர்பூசனை-நிதிதவாபரமதில் வச்சிராங்கதனின்ற கிருபனும்வீரசம்பு, நாதனேகலியில்வல் லாளபிரபுடதேவ ராமர்தருமஞ்சகாப்த்த - நவிலாயிரத்தேழு னூறுமெழுபத்துமே னுடபிலவங்கவருட, மாதியாய்நின்றதலதருமகர்த்தாவானவருள்பெறுவசந்தராயர்-அண்ணாவினிற்றுதிசெ யுண்ணாமுலைக்குரிய வண்ணாமலைத்தேவனே..(ளக)

( அவையடக்கங்கூறியது. )

பரிமளந்தோயிதழி மாலையொடுமணமிலாப் பச்சிளம்புல்லறுகினைப் - பழுதென்றுதள்ளாம லீசனுளமகிழ்வொடும் படர்சடையிலேற்றபடியால், விரவுமாசையினாலுரைத்தவிச்சதகமது மிக்கபுன்சொல்லாயினும் - மேதினியெலாம்புகழி லக்கணமிலக்கிய மிகத்தெளிந்தறிநாவலர், பரவுநின்புகழ்தலப் பெருமையின்றுதியிருப் பதனாலிகழ்ந்திடாமற்-படியுளநிறைந்தன்பு கொடுபெரிதுவந்தருட் பாலித்துமேற்கொள்ளுவார், அரியயனுடிந்திரன் பூசித்தவீசனே யருள்பெறுவசந்தராயர் - அண்ணாவினிற்றுதிசெ யுண்ணாமுலைக்குரிய வண்ணாமலைத்தேவனே.............(ளஉ)

( வாழிகூறியது. )

சந்ததமுமோதுநான் மறைவாழியாகந் தளிர்க்கும்பசுக்கள்வாழி-தரணிகாவலர்வாழி மனுநீதிவாழிமுத் தமிழ்

வாழிவேள்விதனிலே, வந்தெழுந்தெய்வீக மன்னவன்வாழியவன் மதலைமெய்ப்பொருளாயனார்-மைந்தர்வழிவந்தவர்கள் வாழிகுகமுனிவாழி மாதவநிறைந்துவாழி, சுந்தரமிகுந்தவுண்ணுமுலைத்தாய்வாழி சோதிப்ரகாசமாகத்-தோன்றுமண்ணுமலைப் பரமனார்வாழிமெய்த் துணைமனோன்மணியும்வாழி, யந்தணர்கள்வாழியெழில் சிங்கபுரிவாழிமெய் யருள்பெறுயசந்தராயர்-அண்ணுவினிற்றுதிசெயுன்ணுமுலைசூரிய வண்ணுமலைத்தேவனே............(௱௩)

அண்ணுமலைச்சதகம் - முற்றிற்று.

## பிரசித்தபத்திரிகை.

இந்நூல் யாவருக்கும் அறிவிப்பதென்னவெனில்—இப்புஸ்தகம் வேண்டுபவர்கள் குச்சிலிக்கடைவீதியில் சென்னகேசவப்பெருமாள் கோயிலுக்குப்பக்கத்தில் பாய்கடை வைத்திருக்கும் சிங்காரமுதலியாரிடத்திலும், திருவையாற்றில் வடக்குவீதியிலிருக்கும் ம-௱-௱-ஸ்ரீ, முத்துச்சாமிபாரதியாரிடத்திலும், மேல்படிவூரில் புத்தகவியாபாரி - இரங்கசாமிநாயக்கரிடத்திலும், தஞ்சாவூர் புத்தகவியாபாரி - திருவேங்கடபிள்ளையிடத்திலும், திருச்சிறுபள்ளியில் புத்தகக்கடையிலும், சென்னை கிருஷ்ணப்பநாயக்கன்குளத்துத்தெரு - கஎ - வது நெம்பருடைய வீட்டிலிருக்கும் கா - பொன்னம்பலமுதலியாரிடத்திலும் வாங்கிக்கொள்ளலாம்.

இதன்விலை அணு—உ.